11th March 1959]

SRI M. KALYANASUNDARAM : இந்த அரிசி கேட்டு கொடுக்கப்படாததால் நியாய விலைக் கடைகள் மூடப்பட்டனவா ? அல்லது இங்கே நியாய விலைக் கடைகளுக்கு அவசியம் இல்லை என்பதால் மூடப்பட்டனவா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : நியாய் விலைக் கடைகள் அரிசியைப் பொருத்தமட்டில், மூடப்பட்டன. இந்த அரசாங்கத்தைப் பொருத்தவரையில் சீன அரிசியோ ரஷ்ய அரிசியோ வேண்டுமென்று கோரவில்லை. மத்திய அரசாங்கம் என்ன கோரினார்கள், என்ன கிடைத்தது என்று இந்த அரசாங்கத்திடம் தகவல் இல்லை.

SRI N. K. PALANISAMI : நம் மாகாணத்திற்குப் போதுமான "பப்பர்ஸ்டாக்" ஆக அரிசி வேண்டுமென்று மத்திய சர்க்காரை எப்போதாவது கேட்டதுண்டா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : கேட்கவில்லை ; கேட்க வேண்டிய நிமித்தம் எற்படவில்லை.

SRI S. LAZAR : ஒரு சில மேற்கத்தி நாடுகளிலிருந்து பால் பௌடர் உணவு பொருள்கள் இங்கே வந்துகொண்டிருப்பது போன்று கிழக்கத்திய நாடுகளிலிருந்து இனாமாக அரிசியைக் கொண்டு வருவதற்கு முன் வருவார்களா என்பதை அறிய விரும்புகிறேன். 9-00 p.m.

THE HON. SRI M. BHAKTAVATSALAM : அரிசி பிச்சை எடுக்க வேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை.

SRI A. GOVINDASAMY : போதுமான அரிசி நமக்குக் கிடைக்காமல் இருப்பதாலும், அதன் விலை அதிகமாக இருப்பதாலும், பதுக்கல் காரர்கள் அரிசியை பதுக்கி வைத்துக்கொண்டிருப்பதாலும், வெளியிலிருந்து அதாவது பர்மா முதலிய இடங்களிலிருந்து இங்கு கொண்டு வந்து குறைந்த விலைக்கு விற்கும்படியான ஏற்பாடு செய்வதோடு பதுக்கல் காரர்களுக்கு ஒரு ஏமாற்றத்தை உண்டு பண்ணுவதற்கு இந்த சர்க்கார் நடவடிக்கை எடுக்க முன் வருவார்களா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : பதுக்கல்காரர்கள் அரிசியை பதுக்கி வைத்துக்கொண்டிருந்தால் அதை வெளியே கொண்டு வருவதற்கு அரசாங்கத்திடம் வழி இருக்கிறது. அதற்காக பர்மாவிலிருந் அரிசியைக் கொண்டு வரவேண்டிய அவசியம் இல்லை.

### *City hospitals*

* 707 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Revenue be pleased to state—

(*a*) whether the Government are aware of the over-crowding in the hospitals in the Madras City; and

(*b*) if so, the action taken to increase the bed-strength of the hospitals?

THE HON. SRI M. A. MANICKAVELU : (*a*) Yes, Sir.

(*b*) All possible steps have been taken to provide more facilities for in-patient treatment at the City Hospitals.

SRI A. A. RASHEED : When was the bed strength increased recently in the Hospitals?

THE HON. SRI M. A. MANICKAVELU : Sir, we have been increasing the bed strength. Last time the bed strength of the General Hospital was raised from 887 to 1,125. Proposals for improvements to the out-patient department at a cost of Rs. 90,000

has been recently sanctioned. A proposal for extension of spurs in both sides of Wards Nos. 3, 4, 6 and 7 in the Hospital so as to provide more accommodation for in-patient treatment is under consideration.

With regard to the Government Stanley Hospital, the bed strength was increased from 724 to 800. There is also a proposal to construct a three-floor men chronic medical block of 90 beds.

With regard to the Government Hospital of Integrated Medicine, the bed strength was increased from 210 to 270. Like that, there is some increase in other hospitals also.

SRI A. A. RASHEED : Has any extension been made in the Mental Hospital?

THE HON. SRI M. A. MANICKAVELU : Yes, Sir. In the Government Mental Hospital, the bed strength was increased from 888 to 1,800.

SRI K. B. S. MANI : இம்மாதிரி சென்னை நகரத்தில் ஆஸ்பத்திரியை விஸ்தரிக்க வேண்டிய அவசியம் ஜனத்தொகை காரணமா, அல்லது சென்னைக்கு வந்து போகிற ப்ளோட்டிங் ஜனத்தொகை காரணமா அல்லது ப்ளோட்டிங் ஜனத்தொகையால் ஏற்படுகிற வியாதிகள் அதிகமாவதன் காரணமா என்பதை அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI M. A. MANICKAVELU : ஜனத்தொகை அதிகமாக இருப்பதன் காரணம்தான். ப்ளோட்டிங் ஜனத்தொகை சென்னைக்கு அதிகமாக வந்து போவதன் காரணமும்தான். அதனால் அதிக வியாதிகள் ஏற்படுவதும் காரணமாக இருக்கிறது.

*Pest attack on paddy crops*

* 708 Q.—SRI S. LAZAR : Will the Hon. the Minister for Home be pleased to state—

(a) the extent of paddy crops affected by pest in October and November 1958 in the Lalgudi taluk, Tiruchirappalli district;

(b) the measures taken to fight this menace;

(c) whether there is any proposal to provide every District Agricultural Officer with at least 200 sprayers to be given on hire to ryots;

(d) if not, whether there is any other scheme with the Government to solve the scarcity of sprayers; and

(e) whether there is any proposal to award prizes to officers who have taken prompt action for the effective control of the pests?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (a) to (e) The answer[a] is placed on the table of the House.

SRI S. LAZAR : அதற்குப் பிறகு பெரும் அளவில் பாதிக்கப்பட்டிருக்கிறது என்ற முறையில் சலுகைகள் வேண்டுமென்று கேட்கிறவர்களுக்கு சலுகைகள் என்ன வழங்கப்பட்டிருக்கிறது என்பதை அறிவிக்க முடியுமா ?

[a] Printed as Appendix V on pages 95 infra.